25th January 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தொழிற்சாலை வைப்பதென்பது அரசாங்கத்தின் உத்தேசம். அதை அவசரமாக உடனடியாகச் செய்வதில் கஷ்டம் இருக்கிறது. எல்லாவற்றையும் பார்த்து எவ்வளவு சீக்கிரத்தில் வைக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் வைக்கவேண்டுமென்பதுதான் உத்தேசம்.

## *Bridges*

* 169 *Q.*—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Works be pleased to state how many new bridges and culverts have been constructed during the Second Plan period so far and the total cost incurred in each taluk of Thanjavur district?

THE HON. SRI P. KAKKAN : The information is laid on the table of the House.[a]

SRI R. SRINIVASA IYER: அறந்தாங்கி தாலூகாவிலே பிரிட்ஜே கட்டவில்லை. பட்டுக்கோட்டை தாலூகாவில் ஒன்று கட்டியதாகப் போட்டிருக்கிறார்கள். பட்டுக்கோட்டை—அறந்தாங்கி பகுதி யானது மிகவும் பிற்போக்கான பகுதி. அதிகமான காட்டாறுகள் குறுக்கே போகக் கூடிய காரணத்தினால் கள்ளக்கடத்தலுக்குச் சௌகரியமாக இருப்பதோடு கூட குற்றங்களை சிற்சில சமயங்களில் கண்டுபிடிக்க முடியாமல் இருப்பதால் இனிமேலாவது இங்கிருக்கும் ஆறுகளில் பாலங்கள் கட்டி போக்குவரத்துக்கு வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்களுக்கே தெரியும், எங்கெல்லாம் பாலங்கள் கட்டவேண்டுமோ அங்கெல்லாம் கட்ட திட்டமிட்டுக் கட்டிக்கொண்டுதான் வருகிறோம். வெகு சீக்கிரத்தில் 2 பாலங்களுக்கு அஸ்திவாரக்கல் கூட நாட்டப் போகிறோம்.

SRI R. SRINIVASA IYER : ராமநாதபுரம் ஜில்லாவிலே, முதுகளத்தூர் பகுதியிலே அதிகப் பாலங்கள் கட்டி இப்போது போக்குவரத்து சாதனங்கள் சௌகரியமாக இருப்பதால் மக்களுக்கு மிகவும் சௌகரியமாக இருக்கிறது என்று சொல்லு கிறார்கள். அம்மாதிரியே இந்தப் பகுதியையும் நல்ல கண்ணோட்டத்தோடு பார்த்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஜாஸ்தியாகப் பணம் ஒதுக்கி நல்ல நிலைக்குக் கொண்டுவர சர்க்கார் முயற்சிக்குமா என்று அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI P. KAKKAN : இங்கு வெகு நாட்களாக ரோடு அமைப்பு சரியாக இல்லை. அங்கு வாழக்கூடிய மக்கள் அறந்தாங்கி தாலூகா மக்களைப் போல ஏழைகளாக இருப்பதால் அங்கு முக்கியமாகச் செய்யவேண்டுமென்று விசேஷமாகச் செய்யப்பட்டது. அறந்தாங்கி தாலூகாவைப்பற்றி கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு குறிப்பு கொடுத்து எங்கெங்கே போட வேண்டுமென்று சொன்னால் அதை கவனிக்கலாம்.

---

a Printed as Appendix I on page 581 infra.

[25th January 1961

**SRI A. VEDARATHNAM** : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கின்ற அறிக்கையில் கண்டிருக்கிற பாலங்களின் விவரங்களைத் தாலூகாவாரியாக சொல்ல முடியுமா ? திருத்துறைப்பூண்டி தாலூகாவில் மூன்று என்று சொல்லப்பட்டிருக்கிறதே, அவைகள் எவை என்று அறிவிக்க முடியுமா ? இன்னும் போடவிருக்கின்ற பாலங்களைப்பற்றியும் கூற முடியுமா ?

**THE HON. SRI P. KAKKAN** : இன்னும் தஞ்சாவூர், பாபநாசம், ஒரத்தநாடு முதலிய தாலூகாக்களில் 80,000 ரூபாய் அளவுக்கு வேலை நடந்து வருகின்றது. அவைகள் மார்ச் மாதத்தில் முடியும். இன்னும் 4 பாலங்கள் கட்ட அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில், இரண்டாவது வருஷத்தில் முடிக்க திட்டமிட்டிருக்கிறது. இன்னும் 13 பாலங்களையும் 10 கல்வெர்ட்டுகளையும் கட்ட அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. அவைகளும் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இன்னும் டெக்னிக்கல் ஸாங்ஷன் ஆகவில்லை.

அந்த நான்கு பாலங்கள்—

| | Estimated cost in lakhs. RS. |
|---|---|
| 1 Construoting a bridge across Adapar at M. 19/4 of Velanganni-Vedaranyam road. | 6.90 |
| 2 Reconstruoting the bridge across Ammanar at M. 6/1 of Tranquebar-Mayuram road. | 0·90 |
| 3 Constructing a bridge across Arasalar at M. 4/2 of Tiruneelakudi-Kanalangudi road. | 2·49 |
| 4 Construction of bridge across Kaduvyar at M. 4/4 of Sikkli-Palakurichi road. | 1·00 |

**SRI R. SRINIVASA IYER** : பட்டுக்கோட்டை தாலூகாவிலே ராஜா மடத்திற்கு அருகிலே ஒரு பாலம் கட்டுவதாக ஏற்கெனவே ஒரு திட்டம் இருந்தது. அது இப்போது என்ன நிலையில் இருக்கிறது ? அதேபோல் கிழக்கு கடற்கரை ஓரத்திலுள்ள அம்பாசமுத்திரத்திலே உள்ள அம்புலி ஆற்றிற்கு அருகிலும் ஒரு பாலம் போடுவதாக இருந்தது. அதுவும் எந்த நிலையில் இருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI P. KAKKAN** : கனம் அங்கத்தினர் அவர்கள் தனியாகக் கேள்வி கேட்டால் பதிலளிப்பதற்கு வசதியாக இருக்கும்.

*State Bank and Taluk Treasuries*

* 170 *Q*.—**SRI M. K. SOMASUNDARAM** (on behalf of Sri N. R. Thiagarajan) : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஸ்டேட் பாங்கும், தாலூகா டிரஷரியும் வெவ்வேறு இடங்களில் இருப்பதால் பொதுமக்களுக்கு அசௌகரியமிருப்பதை சர்க்கார் அறியுமா ?

(இ) இரண்டையும் ஒரே இடத்தில் வைக்க உத்தரவிடுவார்களா ?